# رسالة في سجود السهو

لفضيلة الشيخ العلامة

## محمد بن صالح العثيمين

غفر الله له ولوالديه وللمسلمين

ترجمه الى لغة تاميل

**علي ابو خالد العمرى**

# மறதிக்கான சுஜூது ஏன், எப்படி?

**மேன்மைமிகு ஷைக்**

## முஹம்மது பின் ஸாலிஹ் உஸைமீன் (ரஹ்)

தமிழில்

**K.J. மஸ்தான் அலீ பாகவி, உமரி**

**(அபூ காலித்)**

بسم الله الرحمن الرحيم

## முன்னுரை

எல்லாப் புகழும் அல்லாஹ் ஒருவனுக்கே! கருணையும் ஈடேற்றமும் இறைமார்க்கத்தைத் தெளிவாக எடுத்துரைத்த முஹம்மது நபி அவர்கள் மீதும் அவர்களின் குடும்பத்தினர், தோழர்கள் மீதும் வாய்மை யுடன் அவர்களைப் பின்பற்றி வாழ்ந்து சென்ற நன்மக்கள் அனைவர் மீதும் என்றென்றும் பொழியட்டு மாகுக!

மறதிக்கான சுஜூது பற்றிய விவரங்களைப் பெரும்பாலான மக்கள் சரியாகப் புரியாதவர்களாக இருக்கிறார்கள்.

சிலர் மறதிக்கான சுஜூதை, அதற்குரிய முறையான இடத்தில் செய்யாமல் விட்டு விடுகிறார்கள்.

வேறு சிலர், அந்த சுஜூதை எப்போது செய்ய வேண்டுமோ அப்போது செய்யாமல் இடம் மாற்றிச் செய்கிறார்கள்.

இன்னும் சிலர், சலாம் கொடுத்த பிறகுதான் மறதிக்கான சுஜூது செய்ய வேண்டும் என்றிருக்கும் நிலையில் சலாம் கொடுப்பதற்கு முன்பே அதைச் செய்துவிடுகிறார்கள்,

இன்னும் சிலர் சலாம் கொடுப்பதற்கு முன்பே மறதி சுஜூது செய்ய வேண்டும் என்றிருக்கும் நிலை யில் சலாம் கொடுத்த பிறகு செய்கிறார்கள்.

எனவே மறதிக்கான சுஜூது பற்றிய சட்ட விவரங்களை அறிந்து கொள்வது மிக முக்கியமாகும். அதிலும் குறிப்பாக இமாம்களுக்கு அது மிகவும் அவசியமாகும். அவர்களைப் பின்பற்றியே மக்கள் தமது தொழுகையை நிறைவேற்றுகிறார்கள். மேலும் ஷரீஅத்தின் நடைமுறைப்படி தொழுவிப்பதற்கு இமாம்கள் தான் பொறுப்பானவர்கள் ஆவர்.

எனவே மறதி சுஜூ து தொடர்பான சில சட்டங்களை என் சகோதரர்களுக்கு வழங்கிட வேண்டும் என நான் விரும்பினேன். நம்பிக்கையாளர்களான நல்லடியார்களுக்கு அதன் மூலம் அல்லாஹ் நற்பயன் அளிப்பதை எதிர்பார்த்தவனாக இந்தப் பணியைச் செய்கிறேன். உயர்வுமிக்க அல்லாஹ்விடம் உதவி தேடியவனாகவும் சரியான கருத்துகளை எழுதுவதற்கு நல்லருள் புரிந்திட வேண்டுமென அவனிடம் பிரார்த்தனை செய்தவனாகவும் இந்த நூலை நான் எழுதுகிறேன்.

மறதிக்கான சுஜூ து என்பது, தொழுகையாளி தனது தொழுகையில் ஏற்பட்ட தவறை நிவர்த்தி செய்வதற்காகச் செய்யும் இரண்டு சஜ்தாகள் ஆகும்.

## மறதி சுஜூ தின் காரணங்கள்

இதற்குரிய காரணங்கள் மூன்று: அதிகப்படுத்தல், குறைத்தல், ஐயம் கொள்ளல்.

## முதல் காரணம்: அதிகப்படுத்தல்

நிற்பதையோ அமர்வதையோ ருகூவுவையோ அல்லது சுஜூ தையோ தொழுகையாளி வேண்டுமென்றே தனது தொழுகையில் அதிகப்படுத்தினால் அவரது தொழுகை பாழாகிவிடும்.

ஆனால் மறதியாக அவ்வாறு செய்தால் தொழுகை நிறைவேறி விடும். மறதிக்கான சுஜூ தைத் தவிர வேறு எதுவும் அவர் செய்ய வேண்டியதில்லை.

இவ்வாறு அதிகப்படுத்தியது பற்றி - அப்படிச் செய்யும் போதே நினைவு வந்து விட்டால் அதை விட்டு விடுவது அவர் மீது கடமை ஆகும். மறதிக்கான சுஜூ து செய்ய வேண்டும். அவரது தொழுகை சரியாக நிறைவேறி விடும்.

எடுத்துக்காட்டாக, ஒருமனிதர் ளுஹர் தொழுகையை ஐந்து ரக்அத்தாக தொழுகிறார்., ஒரு ரக்அத் அதிகமாகி விட்டது என்பது அத்தஹிய்யாத்தில் இருக்கும்போதுதான் நினைவுக்கு வருகிறது என்றால், அத்தஹிய்யாத்தை முழுமையாக ஓதுவார்., சலாம் கொடுப்பார்., பிறகு மறதிக்கான இரண்டு சஜ்தா செய்வார்.

சலாம் கொடுத்த பிறகுதான் அது பற்றி நினைவு வருகிறது என்றால், மறதி ஏற்பட்டதற்காக இரண்டு சஜ்தா செய்வார்., சலாம் கொடுப்பார். இதற்கு ஆதாரம்:

حديث عبد الله بن مسعود ﵁ ان النبي ﷺ صَلَّى الظُّهْرَ خَمْسًا فَقِيْلَ لَهُ : أ زِيْدَ فِى الصَّلاَةِ ؟ فَقَالَ : وَمَا ذَاكَ؟ قَالُوْا : صَلَّيْتَ خَمْسًا ، فَسَجَدَ سَجْدَتَيْنِ بَعْدَ ماَ سَلَّمَ وَفِى رِوَايَةٍ : فَثَنَّى رِجْلَيْهِ وَاسْتَقْبَلَ الْقِبْلَةَ فَسَجَدَ سَجْدَتَيْنِ ثَمَّ سَلَّمَ – رواه الجماعة

அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி)அவர்கள் [1] அறிவிக்கிறார்கள்: நபி(ஸல்)அவர்கள்,ளுஹர் தொழுகையை ஐந்து ரக்அத்தாக தொழுவித்தார்கள். அப்பொழுது, தொழுகையில் (ரக்அத்) அதிகப்படுத்தப்பட்டுள்ளதா? என்று கேட்கப்பட்டது. நபி (ஸல்) அவர்கள், என்ன விஷயம்? என்று வினவினார்கள். மக்கள், ஐந்து ரக்அத்தாக தொழுவித்தீர்களே என்று சொன்னார்கள். உடனே நபி (ஸல்) அவர்கள் சலாம் கொடுத்த பிறகு இரண்டு சஜ்தா செய்தார்கள்.

மற்றோர் அறிவிப்பில் உள்ளது: நபி(ஸல்) அவர்கள் தமது இரண்டு கால்களை மடித்து, கிப்லாவை முன்னோக்கி இரண்டு சஜ்தா செய்தார்கள். பிறகு சலாம் கொடுத்தார்கள் - இதனை ஜமாஅத் - ஒரு குழுவினர் [2] அறிவித்துள்ளனர்.

---

[1] **இமாம் புகாரியும் முஸ்லிமும் அறிவித்துள்ளார்கள். இமாம் புகாரி, தொழுகை எனும் பகுதியில் கிப்லா பாடத்தில் (எண் 404) சுருக்கமாக அறிவித்துள்ளார்கள். மேலும் விரிவாகவும் (எண் 401) அறிவித்துள்ளார்கள். மறதி பாடத்தில் (எண் 1227) இடம் பெற்றுள்ளது. வேறு இடங்களிலும் வந்துள்ளது. இமாம் முஸ்லிம், பள்ளிவாசல்கள் எனும் பகுதியில் தொழுகையில் மறதி எனும் பாடத்தில் (எண் 91 மற்றும் 572) இல் அறிவித்துள்ளார்கள்.**

[2] **அந்தக் குழுவின் மீதிப் பேர்: இமாம் அபூ தாவூத், தொழுகை எனும் பகுதியில் ஐந்து ரக்அத் தொழுதால் என்ன செய்வது எனும் பாடத்தில் அறிவித்துள்ளார்கள். (எண் 2019 - 1020) இமாம் திர்மிதி, சலாம் மற்றும் பேச்சுக்குப் பிறகு மறதிக்கான இரண்டு சஜ்தா எனும் பாடத்தில் அறிவித்துள்ளார்கள். (எண் 392) இமாம் நஸாஈ, மறதி எனும் பகுதியில் முனைந்து தேடுதல் பாடத்தில் அறிவித்துள்ளார்கள். (எண் 3 - 33 மற்றும் 1242 மற்றும் 1243) இமாம் இப்னு மாஜா, தொழுகையை நிலை நாட்டுதல் எனும் பகுதியில், தொழுகையில் மறதிக்குள்ளானவர் எனும் பாடத்தில் (எண் 1211) அறிவித்துள்ளார்கள்.**

**தொழுகை நிறைவுபெறும் முன் சலாம் கொடுத்தல்:** தொழுகை நிறைவு பெறுவதற்கு முன் சலாம் கொடுப்பது தொழுகையில் அதிகப்படுத்தல் ஆகும்.[3] தொழுகையாளி, தொழுகை முழுமை பெறுவதற்கு முன்னதாக வேண்டு மென்றே **சலாம்** கொடுத்தால் அவரது தொழுகை பாழாகி விடும்.

மறந்து அவ்வாறு செய்தால் - பிறகு வெகு நேரத்திற்குப் பிறகுதான் அது பற்றி நினைவு வந்தது என்றால் அந்தத் தொழுகையைப் புதிதாக மீண்டும் தொழ வேண்டும்.

சிறிது நேரத்திலேயே - இரண்டு மூன்று நிமிடத்திலேயே நினைக்கு வந்து விட்டால், அப்படியே தொழுகையை நிறைவு செய்ய வேண்டும்., மறதிக்கான இரண்டு சஜ்தா செய்ய வேண்டும்., பிறகு சலாம் கொடுக்க வேண்டும்.

இதற்கு ஆதாரம் அபூ ஹு ரைரா (ரலி) அவர்கள் அறிவித்துள்ள இந்த அறிவிப்பாகும்:

**دليل ذلك حديث ابى هريرة ﵁ ان النبي ﷺ صَلَّى بِهِمُ الظُّهَرَ اَوِ العَصْرَ فَسَلَّمَ مِنْ رَكْعَتَيْنِ فَخَرَجَ السَّرْعَانُ مِنْ أَبْوَابِ الْمَسْجِدِ يَقُوْلُوْنَ : قُصِرَتِ الصَّلاَةُ وَقَامَ النَّبِيُّ ﷺ اِلَى خَشَبَةٍ فِى المَسْجِدِ فَاتَّكَأَ عَلَيْهَا كَأَنَّهُ غَضْبَانُ ، فَقَامَ رَجُلٌ فَقَالَ : يَا رَسُوْلَ الله ، أَنَسِيْتَ أَمْ قُصِرَتِ الصَّلاَةُ ؟ فَقَالَ النَّبِيُّ ﷺ : لَمْ أَنْسَ وَلَمْ تُقْصَرْ فَقَالَ الرَّجُلُ: بَلَى قَدْ نَسِيْتَ فَقَالَ النَّبِيُّ ﷺ لِلصَّحَابَةِ :أَحَقٌ مَا يَقُوْلُ؟ قَالُوْا : نَعَمْ ،فَتَقَدَّمَ النَّبِيُّ ﷺفَصَلَّىمَا بَقِيَ مِنْ صَلاَتِهِ ثُمَّ سَلَّمَ ثُمَّ سَجَدَ سَجْدَتَيْنِ ثُمَّ سَلَّمَ (متفق عليه)**

நபி (ஸல்)அவர்கள் ளுஹ்ரை அல்லது அஸ்ரை மக்களுக்குத் தொழுவித்தார்கள். இரண்டு ரக்அத் திலேயே சலாம் கொடுத்தார்கள். அவசரக்காரர்கள் மஸ்ஜிதின் வாசல்கள் வழியாக வெளியேறி - தொழுகை குறைக்கப்பட்டு விட்டது என்று பேசிக்கொண்டார்கள். நபி(ஸல்) அவர்கள் பள்ளிவாசலில் (நாட்டப்பட்டிருந்த) ஒரு மரக்கட்டையின் அருகே சென்று அதன் மீது சாய்ந்து அமர்ந்தார்கள். கோபம் கொண்டவர்கள் போல் இருந்தார்கள்.

ஒரு மனிதர் எழுந்து கேட்டார்: அல்லாஹ்வின் தூதரே! மறந்து விட்டீர்களா? அல்லது தொழுகை குறைக்கப்பட்டுள்ளதா? அதற்கு நபி (ஸல்)அவர்கள், நான் மறக்கவுமில்லை., தொழுகை குறைக்கப் படவுமில்லை என்றார்கள். அதற்கு அந்த மனிதர், இல்லை, நீங்கள் மறந்திருக்கிறீர்கள் என்றார்.

நபியவர்கள், தோழர்களிடம் கேட்டார்கள்: இவர் சொல்வது சரியா? அதற்குத் தோழர்கள், ஆம் என் றார்கள். உடனே நபியவர்கள் முன்னே வந்து மீதித் தொழுகையை நிறைவேற்றினார்கள். பிறகு சலாம் கொடுத்தார்கள். பிறகு இரண்டு சஜ்தா செய்தார்கள். பிறகு சலாம் கொடுத்தார்கள் (நூல்: புகாரி, முஸ்லிம்) [4]

தொழகை நிறைவு பெறும் முன்பே இமாம் சலாம் கொடுத்து விட்டால், பின்பற்றித் தொழுவோரில் தாமதமாக வந்தவர்கள் தங்களது மீதித் தொழுகையை நிறைவேற்ற எழுந்து விட்டால் - அதன் பிறகே - தொழுகையில் குறைபாடு உள்ளது என்பது இமாமுக்கு நினைவு வந்தால், உடனே எழுந்து அதனை அவர் நிறைவுபடுத்துவார். (இமாம் சலாம் கொடுத்ததும்) தமக்கு விடுபட்டதை எழுந்து தொழக் கூடிய வர்கள் விரும்பினால் மீதியை நிறைவேற்றுவதில் தொடர்ந்து ஈடுபடுவார்கள்., மேலும் மறதிக்கான சுஜூ து செய்வார்கள். அல்லது (மீதியை நிறைவேற்றுவதை விட்டுவிட்டு) இமாமுடன் சேர்ந்து கொள்வார்கள். இமாம் சலாம் கொடுத்ததும் தங்களது மீதித் தொழுகையைத் தொழுவார்கள். சலாம் கொடுத்த பிறகு மறதிக்கான சஜ்தா செய்வார்கள். - இப்படிச் செய்வதுதான் சிறந்தது., மிகவும் பேணுதலானது.

## இரண்டாவது காரணம்: குறைப்பது

---

[3] **இது அதிகப்படுத்தல் என்றானதற்குக் காரணம், தொழுகைக்கு மத்தியில் ஒரு சலாமை அதிகப்படுத்தி விட்டார் என்பதாகும்.**

[4] **இமாம் புகாரி, தொழுகை பகுதியில் - பள்ளிவாசலில் விரல்களைக் கோர்த்தல் எனும் பாடத்தில் இதனை விரவாக அறிவித்துள்ளார்கள். (எண் 482) பாங்கு பாடத்தில் சுருக்கமாக அறிவித்துள்ளார்கள். (எண் 714 - 715) மறதிக்கான சுஜூ து பாடத்தில் (எண் 1226) வேறு இடங்களிலும் இது இடம் பெற்றுள்ளது. இமாம் முஸ்லிம், பள்ளி வாசல்கள் பகுதில் - தொழுகையில் மறதி எனும் பாடத்தில் அறிவித்துள்ளார்கள். (எண் 97 - 573)**

(அ) அடிப்படைக் கடமை (ருக்ன்) ஒன்றை குறைப்பது: தொழுகையில் அடிப்படைக் கடமை ஒன்றைக் குறைத்தால், அதாவது, அல்லாஹு அக்பர் என்று தக்பீர் கட்டுவதைக் குறைத்தால் அவரது தொழுகை செல்லுபடியாகாது., அதை வேண்டுமென்றே விட்டாலும் சரி மறதியாக விட்டாலும் சரியே! ஏனெனில் அவரது தொழுகை தொடங்கப் பெறவே இல்லை!

அப்படிக் குறைத்தது, அல்லாஹு அக்பர் என்று தக்பீர் கட்டுவதல்லாத வேறு ஒன்றாக இருந்தால் - அதை வேண்டுமென்று விட்டிருந்தால் அவரது தொழுகை வீணாகி விடும். மறதியாக விட்டிருந்தால் - இரண்டாவது ரக்அத்தில் அந்த இடத்திற்கு அவர் வந்ததும் முந்தைய ரக்அத் வீணாகி விடும். இப்பொழுது தொழுத ரக்அத், அந்த (வீணான) ரக்அத்தின் இடத்தில் அமைந்துவிடும்.

மறதியாக விட்டிருந்து, இரண்டாவது ரக்அத்தில் அந்த இடத்திற்கு அவர் இன்னும் வரவில்லை என்றிருந்தால் விடுபட்ட அந்த ருக்னின் பக்கம் அவர் திரும்பிச் செல்வது அவர் மீது கடமையாகும். அதையும் அதற்கு பிறகு உள்ளவற்றையும் வரிசையாகச் செய்து வர வேண்டும். இந்த இரண்டு நிலை களிலும் - சலாம் கொடுத்த பிறகு மறதிக்கான இரண்டு சஜ்தா செய்ய வேண்டும்.

எடுத்துக்காட்டு: ஒருவர் முதல் ரக்அத்தில் இரண்டாவது சஜ்தாவை மறந்து விட்டார். பிறகு இரண் டாவது ரக்அத்தில் ஒரு சஜ்தா செய்து விட்டு அமர்ந்திருக்கும் போதுதான் அவருக்கு நினைவு வந்தது என்றால் அதனை ஒரு ரக்அத் என்றே அவர் கணித்திட வேண்டும். அதாவது முந்தைய ரக்அத் வீணாகி விடும். அதன் இடத்தை இரண்டாவது ரக்அத் பிடித்துக் கொள்ளும். ஆக ஒரு ரக்அத் தொழுதிருப் பதாகக் கருதிக்கொண்டு தொடர்ந்து தொழுகையை நிறைவு செய்வார்., சலாம் கொடுப்பார்., பிறகு மறதிக்கான இரண்டு சஜ்தா செய்வார்., சலாம் கொடுப்பார்.

இன்னோர் எடுத்துக்காட்டு: ஒருவர் இரண்டாவது சஜ்தாவையும் அதற்கு முன் அமர்வதையும் மறந்து விட்டார். (அதாவது ஒரு சஜ்தா செய்ததோடு எழுந்து விட்டார்) பிறகு இரண்டாவது ரக்அத்தில் ருகூவு வில் இருந்து நிமிர்ந்த பிறகுதான் அது பற்றி நினைவு வந்தது என்றால், அவர் திரும்ப உட்கார்ந்து (விடுபட்ட) சஜ்தாவைச் செய்வார்., பிறகு தனது தொழுகையை நிறைவு செய்வார்.,சலாம் கொடுப்பார்., பிறகு மறதிக்கான சஜ்தா செய்வார்., பிறகு சலாம் கொடுப்பார்.

**(2) இரண்டாம் தரக் கடமை (வாஜிப்) ஒன்றைக் குறைப்பது:**

தொழுகையில் இரண்டாம் தரக் கடமைகளில் ஒன்றை வேண்டுமென்றே அவர் விட்டுவிட்டால் அவரது தொழுகை வீணாகிவிடும்.

மறதியாக விட்டால், தொழுகையில் அந்த இடத்தை விட்டுப் பிரியும் முன்பே அது நினைவுக்கு வந் தால் அதைச் செய்வார். அவர் மீது எதுவுமில்லை!

அந்த இடத்தை விட்டும் கடந்துசென்ற பிறகு - ஆனால் அடுத்துள்ள ருக்னை (முதல் தரக் கடமை யைச்) செய்வதற்கு முன்னதாக அது பற்றிய நினைவு வந்தால், விடுபட்டதன் பக்கம் திரும்பி அதைச் செய்வார். பிறகு தனது தொழுகையை நிறைவு செய்வார். சலாம் கொடுப்பார். பிறகு மறதிக்கான இரண்டு சஜ்தா செய்வார். பிறகு சலாம் கொடுப்பார்.

ஆனால் அதற்குப் பிறகு உள்ள ருக்னை செய்யத் தொடங்கிய பிறகு நினைவு வந்தால், விடுபட்டது விடுபட்டதாகவே ஆகிவிடும். எனவே அதன் பக்கம் திரும்பிச் செல்ல மாட்டார். தொடர்ந்து தொழுகை யில் ஈடுபடுவார். சலாம் கொடுப்பதற்கு முன் மறதிக்கான சஜ்தா செய்வார்.

எடுத்துக்காட்டு: ஒருவர் இரண்டாவது ரக்அத்தில் இரண்டாவது சுஜூதிலிருந்து மூன்றாவது ரக்அத் திற்காக எழுவதற்குத் தலையை உயர்த்தினார் என்றால், அதாவது அத்தஹிய்யாத் ஓத மறந்து விட்டார் என்றால், (இங்கு பார்க்க வேண்டும்:) மேலே எழுவதற்கு முன்பே நினைவு வந்து விட்டது எனில், கீழே அமர்ந்து அத்தஹிய்யாத் ஓதுவார். பிறகு தனது தொழுகையை முழுமைப்படுத்துவார். சலாம் கொடுப்பார்., பிறகு மறதிக்கான சஜ்தா செய்வார்., சலாம் கொடுப்பார்.

எழுவதற்கு முனைந்து,ஆனால் முழுமையாக எழுந்து நிற்பதற்கு முன்பே நினைவு வந்தது என்றால், திரும்பி கீழே உட்கார்ந்து அத்தஹிய்யாத் ஓதுவார். பிறகு தொழுகையை முழுமையாக்குவார்., சலாம் கொடுப்பார்., பிறகு மறதிக்கான சஜ்தா செய்வார்., சலாம் கொடுப்பார்.

முழுமையாக எழுந்து நின்றதற்குப் பிறகுதான் நினைவு வந்தது என்றால் அந்த அத்தஹிய்யாத்தை ஓதும் பொறுப்பு அவரை விட்டும் நீங்கிவிடும். எனவே உட்கார்ந்து அதை ஓத வேண்டியதில்லை. அப்ப டியே தனது தொழுகையில் தொடர்வார்.,சலாம் கொடுப்பதற்கு முன் மறதிக்கான சஜ்தா செய்வார்.

இதற்கு ஆதாரம்: அப்துல்லாஹ் பின் புஹைனா (ரலி) அவர்களிடம் இருந்து இமாம் புகாரியும் மற்றவர்களும் அறிவித்துள்ள பின்வரும் அறிவிப்பாகும்:

**دليل ذلك ما رواه البخارى وغيره عن عبد الله بن بحينة ﷺ ان النَّبيَّ ﷺ صَلَّى بِهِمُ الظُّهْرَ فَقَامَ فِى الرَّكْعَتَيْنِ الأُولَيَيْنِ وَلَمْ يَجْلِسْ (يَعْنِى لِلتَّشَهُّدِ الأَوَّلِ) فَقَامَ النَّاسُ مَعَهُ حَتَّى اِذَا قَضَى الصَّلاَةَ وَانْتَظَرَ النَّاسُ تَسْلِيْمَهُ كَبَّرَ وَهُوَ جَالِسٌ فَسَجَدَ سَجْدَتَيْنِ قَبْلَ اَنْ يُسَلِّمَ ثُمَّ سَلَّمَ**

நபி(ஸல்) அவர்கள் மக்களுக்குத் தொழுவித்தார்கள் முதல் இரண்டு ரக்அத் முடிந்ததும் நிலைக்கு எழுந்து விட்டார்கள்., (முதல்) அத்தஹிய்யாத் ஓதுவதற்காக அமரவில்லை. நபியவர்களுடன் சேர்ந்து மக்களும் எழுந்து விட்டார்கள். தொழுகையை முழுமைப்படுத்தியதும் நபி (ஸல்) அவர்கள் சலாம் கொடுப்பதை மக்கள் எதிர்பார்த்தார்கள். அமர்ந்தவாறே நபி (ஸல்) அவர்கள் தக்பீர் சொன்னார்கள். சலாம் கொடுப்பதற்கு முன் மறதிக்கான இரண்டு சஜ்தா செய்தார்கள். பிறகு சலாம் கொடுத்தார்கள் (நூல்: புகாரி) [5]

## மூன்றாவது காரணம்: ஐயம் கொள்வது.

ஐயம் என்பது இரண்டு விஷயங்களில் - அவ்விரணடில் எது நடந்தது என்று தடுமாற்றம் அடைவதாகும்.

வழிபாடுகளில் மூன்று நிலைகளில் ஐயத்திற்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட மாட்டாது.

(1) அது, யதார்த்தமல்லாத - வெறும் யூகமாக இருந்தால் - வெறும் ஊசாட்டங்களைப் போன்று இருந்தால் அதைப் பொருட்படுத்த வேண்டியதில்லை

(2) ஒருமனிதனுக்கு அதிக அளவில் சந்தேகம் வருவது வழக்கம். எவ்வாறெனில் எந்த வழிபாட்டில் அவன் ஈடுபட்டாலும் அதில் அவனுக்கு சந்தேகம் வராமல் இருக்காது. இந்தச் சந்தேகத்தைப் பொருட் படுத்த வேண்டியதில்லை.

(3) தொழுகையை நிறைவேற்றி முடித்த பிறகு சந்தேகம் வருவது. (இதையும் பொருட்படுத்த வேண்டிய தில்லை)

ஆக,எந்த விஷயமானாலும் உறுதி ஏற்படாத வரையில் ஐயத்தைப் பொருட்படுத்த வேண்டியதில்லை. யாரானாலும் உறுதியின் தேட்டத்தின்படியே செயல்பட வேண்டும்.

எடுத்துக்காட்டாக, ஒருமனிதர் ளுஹர் தொழுகை தொழுதார். தொழுது முடித்ததும் மூன்று ரக்அத் தொழுதோமா? நான்கு ரக்அத் தொழுதோமா என்று சந்தேகம் அடைகிறார் என்றால், இந்தச் சந்தேகத்தைப் பொருட்படுத்த வேண்டியதில்லை. மூன்று ரக்அத்தான் தொழுதோம் என்று உறுதி ஏற்டாலே தவிர! அப்படி உறுதி ஏற்பட்டால் - **சிறிது நேரம்தான்** கழிந்துள்ளது என்றிருந்தால் தனது தொழுகையை முழுமைப்படுத்துவார். பிறகு சலாம் கொடுப்பார். பிறகு மறதிக்கான சஜ்தா செய்வார்.

**வெகுநேரம் கழிந்த பிறகுதான்** நினைவு வந்தது என்றால் தொழுகையைப் புதிதாகத் தொழுவார்.

இந்த மூன்று இடங்களல்லாத வேறு வகையிலான ஐயம் என்றால் அது கவனிக்கப்படவேண்டியதே ஆகும்.

**தொழுகையில் சந்தேகம் என்பது, இரண்டு நிலைகளில் ஒன்றாகத்தான் இருக்கும்.**

முதல் நிலை: தொழுகையாளியிடம் (அதுவா இதுவா என்கிற) இரண்டு விஷயங்களில் ஏதேனும் ஒன்று மிகைத்து நிற்கும்.அப்படி எது மிகைத்ததாக உள்ளதோ அதைக்கொண்டு அவர் செயல்படுவார்., அதன் பேரில் தொழுகையை நிறைவு செய்வார்., சலாம் கொடுப்பார். பிறகு மறதிக்கான சஜ்தா செய் வார்., சலாம் கொடுப்பார்.

எடுத்துக்காட்டாக, ஒரு மனிதர் ளுஹர் தொழுதார். அது இரண்டாவது ரக்அத்தா மூன்றாவது ரக்அத்தா என்று சந்தேகம் ஏற்பட்டது. ஆனாலும் அது மூன்றாவது ரக்அத் என்பதே மிகையான எண்ண

---

[5] **இமாம் புகாரி, பாங்கு எனும் பகுதியில், அத்தஹிய்யாத் ஓதுவதை கடமை எனக் கருதாதவர் எனும் பாடத்தில் இதனை அறிவித்துள்ளார்கள். (எண் 829) மற்றும் மறதி எனும் பாடத்திலும் அறிவித்துள்ளார்கள் (எண் 1224- 1225) வேறு இடங்களிலும் அறிவித்துள் ளார்கள். இமாம் முஸ்லிம், பள்ளிவாசல்கள் எனும் பகுதியில், தொழுகையில் மறதி எனும் பாடத்தில் அறிவித்துள் ளார்கள். (எண் 85 - 570)**

மாக இருந்தால், அதனை மூன்றாவது ரக்அத் என்றே கணிப்பார். அதன் பிறகு ஒரு ரக்அத் தொழுவார். சலாம் கொடுப்பார். பிறகு மறதிக்கான சஜ்தா செய்வார்.

இதற்கு ஆதாரம்: ஸஹீஹு ல் புகாரியிலும் ஸஹீஹ் முஸ்லிமிலும் பிற நூல்களிலும் பதிவாகியுள்ள இந்த நபிமொழி ஆகும்.

**من حديث عبد الله بن مسعود ﷺ ان النَّبِيَّ ﷺقَالَ : اِذَا شَكَّ أَحَدُكُمْ فِي صَلاَتِهِ فَلْيَتَحَرَّ الصَّوَابَ فَلْيُتِمَّ عَلَيْهِ ، ثُمَّ لِيُسَلِّمْ ، ثُمَّ يَسْجُدْ سَجْدَتَيْنِ (هذا لفظ البخارى)**

அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: உங்களில் ஒருவருக்குத் தொழுகையில் சந்தேகம் வந்தால், எது சரியானது என்பதை அறிந்திட முயற்சி செய்யட்டும். அவ்வாறு அறிந்து அதன்படி தனது தொழுகையை நிறைவு செய்யட்டும். பிறகு சலாம் கொடுக்கட்டும். பிறகு மறதிக்கான இரண்டு சஜ்தா செய்யட்டும். இது புகாரியின் வாசகமாகும். [6]

இரண்டாவது நிலை: இரண்டு விஷயங்களில் எதுவும் அவரிடத்தில் மிகையான எண்ணத்தைப் பெற வில்லை என்றால், உறுதியாக உள்ள குறைந்த எண்ணிக்கையைக் கொண்டு செயல்படுவார். அதன்படி தனது தொழுகையை நிறைவு செய்வார்., சலாம் கொடுப்பதற்கு முன்பு மறதிக்கான சஜ்தா செய்வார்., பிறகு சலாம் கொடுப்பார்.

எடுத்துக்காட்டாக, ஒரு மனிதர் அஸர் தொழுகை தொழுகிறார்., அது இரண்டாவது ரக்அத்தா அல் லது மூன்றாவது ரக்அத்தா என்று சந்தேகம் கொள்கிறார்., இரண்டாவது ரக்அத்தான் என்றோ மூன்றாவது ரக்அத்தான் என்றோ மிகையான எண்ணம் எதுவும் வரவில்லை என்றால், அதை இரண்டா வது ரக்அத் என்றே கருதுவார். முதல் அத்தஹிய்யாத் ஓதுவார். அதன் பிறகு இரண்டு ரக்அத் தொழு வார்., மறதிக்கான சஜ்தா செய்வார்., சலாம் கொடுப்பார்.

இதற்கு ஆதாரம்: அபூ ஸயீதுல் குத்ரி (ரலி) அவர்களிடம் இருந்து இமாம் முஸ்லிம் அறிவித்துள்ள இந்த அறிவிப்பாகும்.

**عن ابى سعيد الخدرى ﷺ ان النَّبِيَّ ﷺ قَالَ : اِذَا شَكَّ أَحَدُكُمْ فِي صَلاَتِهِ فَلَمْ يَدْرِ كَمْ صَلَّى ، ثَلاَثًا أَمْ اَرْبَعًا ؟ فَلْيَطْرَحِ الشَّكَّ وَلْيَبْنِ عَلَى مَا اسْتَيْقَنَ ثُمَّ يَسْجُدْ سَجْدَتَيْنِ قَبْلَ اَنْ يَسَلِّمَ فَاِنْ كَانَ صَلَّى خَمْسًا شَفَّعْنَ لَهُ صَلاَتَهُ ، وَاِنْ كَانَ صَلَّى اتْمَامًا لأَرْبَعٍ كَانَتَا تَرْغِيْمًا لِلشَّيْطَانِ**

நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்: உங்களில் ஒருவருக்குத் தொழுகையில் சந்தேகம் வந்தால், தொழுதது மூன்று ரக்அத்தா அல்லது நான்கு ரக்அத்தா என்று அறியவில்லை என்றால், சந்தேகத்தைப் புறக்கணித்து விட்டு உறுதியின் அடிப்படையில் அதை அமைத்துக் கொள்ளட்டும். பிறகு சலாம் கொடுப் பதற்கு முன்பு மறதிக்கான சஜ்தா செய்யட்டும். உண்மையில் அவன் ஐந்து ரக்அத்கள் தொழுதிருந்தால் அந்த சஜ்தாக்கள் அவனது தொழுகையை இரட்டைப்படையாக ஆக்கும். உண்மையில் நான்கு ரக்அத் தொழுதிருந்தால், மறதிக்கான அந்த சஜ்தாக்கள் ஷைத்தானை மூக்கறுப்பதாக அமையும். [7]

ஐயப்பாட்டின் மற்றோர் எடுத்துக்காட்டு: இமாம் ருகூவு செய்துகொண்டிருக்கும் நிலையில் ஒருவர் வருகிறார் என்றால், நேராக நின்றுகொண்டு **அல்லாஹு அக்பர்** என்று தக்பீர் கட்டுவார். பிறகு ருகூவு செய்வார். இப்பொழுது பின்வரும் மூன்று நிலைகளில் ஒன்றைத்தான் அவர் மேற்கொள்வார்:

முதலாவது நிலை, இமாம் ருகூவுவில் இருந்து தலையை உயர்த்துவதற்கு முன்பே இமாமுடன் சேர்ந்து விட்டதாக உறுதி கொள்வது. இப்பொழுது அந்த ரக்அத் அவருக்குக் கிடைத்துவிடும். ஃபாத் திஹா சூராவை அவர் ஓதாதிருந்தாலும் ஓதியதாக ஆகிவிடும்.

இரண்டாவது நிலை, அவர் ருகூவுவில் சேர்வதற்கு முன்பே இமாம் ருகூவுவில் இருந்து தலையை உயர்த்தி விட்டார் என்று உறுதிகொள்வது. இப்பொழுது அந்த ரக்அத் அவருக்குக் கிடைத்ததாக ஆகாது.

---

[6] **இமாம் புகாரி தொழுகை பகுதியில், கிப்லாவை முன்னோக்குதல் எனும் பாடத்தில் இதனை அறிவித்துள்ளார்கள். இமாம் முஸ்லிம், பள்ளிவாசல்கள் எனும் பகுதியில், தொழுகையில் மறதி எனும் பாடத்தில் இதனை அறிவித்துள்ளார்கள்.**

[7] **இமாம் முஸ்லிம் அவர்கள் பள்ளிவாசல்கள் பகுதியில் தொழுகையில் மறதி எனும் பாடத்தில் இதனை அறிவித்துள்ளார்கள். (எண் 88 - 571)**

மூன்றாவது நிலை, இமாம் ருகூவுவில் இருக்கும்போதே ஜமாஅத்தில் சேர்ந்துவிட்டோமா, இல்லையா என்று சந்தேகிப்பது. இமாம் ருகூவுவில் இருக்கும்போதே சேர்ந்திருந்தால் அந்த ருகூவு அவருக்குக் கிடைக்கும்.

அல்லது ருகூவுவில் அவர் சேருவதற்கு முன்பே இமாம் தலையை உயர்த்திவிட்டாரா? அப்படி உயர்த்தியிருந்தால் அந்த ரக்அத் அவருக்குக் கிடைக்கவில்லை என்றாகும்.

இமாம் ருகூவுவில் இருக்குபோதே ஜமாஅத்தில் சேர்ந்து விட்டோமா,இல்லையா என்கிற இரு விஷயத்தில் - ஒன்று மிகையாக இருந்தால், அந்த மிகையான எண்ணப்படி செயல்படுவார். தொழுகை நிறைவு படுத்தி சலாம் கொடுப்பார். பிறகு மறதிக்கான இரண்டு சஜ்தா செய்வார். பிறகு சாலம் கொடுப்பார். இமாமுடன் சேர்ந்தே முழுத்தொழுகையையும் தொழுதிருந்தால் - எதுவும் தாமதமாக வில்லை என்றிருந்தால் அவர் மறதி சஜ்தா செய்ய வேண்டியதில்லை.

இரண்டு விஷயங்களில் எதுவும் மிகையான எண்ணத்தைப் பெறவில்லை என்றால், உறுதியின்படி (அதாவது அந்த ரக்அத் கிடைக்கவில்லை) என்பதன்படி செயல்படுவார்., தொழுகையை முழுமையாகத் தொழுவார்., சலாம் கொடுப்பதற்கு முன் மறதிக்கான இரண்டு சஜ்தா செய்வார்., பிறகு சாலம் கொடுப்பார்.

## பயனுள்ள கருத்து

தொழும்போது அவருக்குச் சந்தேகம் வந்தால் மேலே சொன்ன விளக்கத்தின்படி - உறுதியின் அடிப்படையில் செயல்படுவார். அல்லது மிகையான எண்ணத்தின் அடிப்படையில் செயல்படுவார். தாம் சரியாகத்தான் தொழுதோம்., அதிகப்படுத்தவும் இல்லை, குறைக்கவும் இல்லை என்பது அதன் பிறகு தெளிவானால், அவர் மறதிக்கான சஜ்தா செய்ய வேண்டியதில்லை. ஏனெனில் சஜ்தாவுக்குக் காரணமான சந்தேகம் நீங்கிவிட்டது! இதுவே நமது மத்ஹபின் பிரபலமான கருத்தாகும்.

அவர் சஜ்தா செய்யத்தான் வேண்டும் என்று இன்னொரு கருத்தும் உள்ளது. எதற்காகவெனில், அதன் மூலம் ஷைத்தானை மூக்கறுக்கச் செய்ய வேண்டும் என்பதற்காக! ஏனெனில், முன்பு சொன்ன நபிமொழியில் கூறப்பட்டுள்ளது: ... உண்மையில் அவர் நான்கு ரக்அத் தொழுதிருந்தால், மறதிக்கான அந்த சஜ்தாகள் ஷைத்தானை மூக்கறுப்பதாக அமையும். [8] மற்றொரு காரணம், சந்தேகத்துடனேயே தனது தொழுகையின் ஒரு பகுதியை நிறைவேற்றியுள்ளார் என்பதாகும். இதுதான் மிகையான கருத்து.

இதற்கு எடுத்துக்காட்டு: தொழுகையில் ஒரு மனிதருக்கு - இரண்டாவது ரக்அத்தா மூன்றாவது ரக்அத்தா என்று சந்தேகம் ஏற்பட்டு, இரண்டில் எந்த விஷயமும் மிகையான எண்ணத்தைப் பெறாத நிலையில், அதை இரண்டாவது ரக்அத்தாகவே அமைத்து அதன்படி தொழுகையை நிறைவுபடுத்தினார்., அதன் பிறகு உண்மையில் அது இரண்டாவது ரக்அத்தான் என்பது தெளிவானால், அவர் (மறதிக்கான) சஜ்தா செய்ய வேண்டியதில்லை. இதுவே மத்ஹபின் பிரபலமான கருத்தாகும். இன்னொரு கருத்தின்படி அவர், சலாம் கொடுப்பதற்கு முன்பு சஜ்தா செய்ய வேண்டும். இதுவே ஆதாரத்தின் அடிப்படையில் சரியானதென்று நாம் கணித்துள்ளதாகும்.

## பின்பற்றித் தொழுபவர் செய்ய வேண்டிய மறதி சஜ்தா

தொழுகையில் இமாமுக்கு மறதி ஏற்பட்டு மறதிக்கான சஜ்தாவை அவர் செய்தால் அவரைப் பின்பற்றித் தொழும் மற்றவர்கள் மீதும் அந்த சஜ்தா கடமைதான். ஏனெனில் நபி(ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்:

لِقَوْلِ النَّبِيِّ ﷺ: اِنَّماَ جُعِلَ الاِمَامُ لِيُؤْتَمَّ بِهِ ، فَلاَ تَخْتَلِفُوْا عَلَيْهِ – الى ان قال : وَاِذَا سَجَدَ فَاسْجُدُوْا (متفق عليه)

இமாம் நியமிக்கப்பட்டிருப்பது அவரைப் பின்பற்றுவதற் காகத்தான்! எனவே அவருக்கு நீங்கள் முரண்படாதீர்கள். (தொடர்ந்து வருகிறது:) அவர் சஜ்தா செய்தால் நீங்களும் சஜ்தா செய்யுங்கள். (புகாரி, முஸ்லிம்) இதனை அபூ ஹுரைரா(ரலி) அறிவித்துள்ளார்கள். [9]

---

[8] இது, அபூ சயீதுல் குத்ரி (ரலி) அவர்கள் அறிவித்த ஹதீஸின் கடைசிப் பகுதி. ஹதீஸ் பதிவாகியுள்ள நூலின் விபரம் அண்மையில் சென்றுள்ளது.

[9] இமாம் புகாரி, ஜமாஅத் தொழுகையின் பகுதியில், இமாம் நியமிக் கப்பட்டிருப்பது அவரைப் பின்பற்றுவதற்காகத்தான் எனும் பாடத்தில் இதனை அறிவித்துள்ளார்கள். (எண் 657) இமாம் முஸ்லிம், தொழுகை பகுதியில், மக்கள் இமாமைப் பின்பற்றுதல் எனும் பாடத்தில் அறிவித் துளார்கள். (எண் 412) இமாம் அபூ தாவூதின் அறிவிப்பில், இமாம் ஓதினால் நீங்கள் மௌனமாக

இமாம் மறதிக்கான சஜ்தாவை சலாமுக்குப் முன்பு செய்தாலும் சரி, சலாமுக்குப் பிறகு செய்தாலும் சரியே பின்பற்றித் தொழுபவர் இமாமைப் போலவே செய்வது கடமை. ஆனால் அவர் தாமதமாக வந்து சேர்ந்திருந் தாலே தவிர! அதாவது இரண்டொரு ரக்அத் அவருக்கு விடுபட்டுள்ளது என்றாலே தவிர! அப்படிப்பட்டவர், சலாம் கொடுத்த பிறகு இமாம் மறதிக்கான சஜ்தா செய்தால், அவரைப் பின்பற்ற மாட்டார். காரணம் அது சிரமம் என்பதுதான்! ஏனெனில் தாமதமாக வந்து இமாமுடன் சேர்ந்தவர் இமாமுடன் சேர்ந்து சலாம் கொடுக்க முடியாது. இப்படிப்பட்டவர் தொழ வேண்டிய ரக்அத்தை தொழுது முடித்துக்கொண்டு சலாம் கொடுப்பார். பிறகு மறதிக்கான சஜ்தா செய்வார்., சலாம் கொடுப்பார்.

எடுத்துக்காட்டாக, சலாம் கொடுத்த பிறகு மறதிக் கான சஜ்தா செய்வது இமாம் மீது கடமையாக இருக்கும் நிலையில், ஒருவர் தாமதமாக வந்து கடைசி ரக்அத்தில் இமாமுடன் ஜமாஅத்தில் சேர்ந்தார். இப்பொழுது தாமதமாக வந்த இந்த மனிதர், இமாம் சலாம் கொடுத்ததும் எழுந்து விடுபட்ட மீதி ரக்அத்களைத் தொழுவார்., இமாமுடன் சஜ்தா செய்ய மாட்டார். மீதி ரக்அத்களைத் தொழுதுமுடித்து சலாம் கொடுத்தார் எனில், சலாமுக்குப் பிறகு (மறதிக்கான) சஜ்தா செய்வார்.

இமாமுக்கு மறதி ஏற்படாத நிலையில், பின்பற்றித் தொழுபவர் மறந்தார் எனில், அத்துடன் தொழுகையில் எதுவும் அவருக்கு விடுபடவில்லை எனில், அவர் (மட்டும் மறதிக்காக) சுஜூது செய்ய வேண்டியதில்லை. ஏனெனில் அதற்காக அவர் சுஜூது செய்தால், அதனால் இமாமுக்கு அவர் முரண்பட வேண்டியது வரும். இமாமை பின்பற்றுவதற்கு இடையூறு ஏற்படும். மேலும் நபி (ஸல்) அவர்களுக்கு மறதி ஏற்பட்டபோது நபித்தோழர்கள் முதல் அத்தஹிய்யாத்தை விட்டு விட்டு, நபியவர்களுடன் மேலே எழுந்தார்களே தவிர, உட்கார்ந்து அத்தஹிய்யாத்தை ஓதவில்லை. காரணம், இமாமாக உள்ள நபியவர்களைப் பின்பற்ற வேண்டும்., அவர்களுக்கு முரணாக செயல்படக் கூடாது என்பதற்காகத்தான்!

ஆனால் தொழுகையில் ஏதேனும் அவருக்கு விடுபட்டிருக்கும் நிலையில் அவருக்கு மறதி ஏற்பட்டால் - இமாமுடன் தொழும்போது மறந்தாலோ விடுபட்டதைத் தொழும்போது மறந்தாலோ - அப்படிப்பட்டவர் சுஜூது செய்யத்தான் வேண்டும். விடுபட்டதை எழுந்து தொழுது முடித்ததும் மறதிக்கான இரண்டு சஜ்தாவை அவர் செய்வார். முன்னர் சென்ற விளக்கத்தின்படி சலாம் கொடுப்பதற்கு முன்போ அதற்குப் பின்போ செய்வார்.

இதற்கு எடுத்துக்காட்டு: பின்பற்றித் தொழக்கூடிய ஒருவர் ருகூவுவில் **சுப்ஹான ரப்பியல் அழீம்** என்று சொல்ல மறந்து விட்டார் எனில், தொழுகையில் எதுவும் அவருக்கு விடுபடவும் இல்லையெனில், அவர் மறதி சுஜூது செய்ய வேண்டியதில்லை. ஆனால் ஒரு ரக்அத் அல்லது இரண்டு ரக்அத் அவருக்கு விடுபட்டிருந்தால், அவற்றை நிறைவேற்றிவிட்டு சலாம் கொடுப்பதற்கு முன்பு மறதிக்கான சுஜூதை செய்வார்.

இன்னோர் எடுத்துக்காட்டு: இமாமுடன் சேர்ந்து ளுஹர் தொழக்கூடியவர், இமாம் நான்காவது ரக்அத்திற்காக எழுந்தபோது எழாமல் - இது கடைசி ரக்அத் என்ற எண்ணத்தில் உட்கார்ந்தார்., பிறகு இமாம் எழுந்து விட்டதை அறிந்ததும் இவரும் எழுந்தார். இப்பொழுது இவருக்கு தொழுகையில் எதுவும் விடுபடவில்லை எனில், மறதிக்கான சுஜூது செய்ய வேண்டியதில்லை. ஆனால் ஒரு ரக்அத் அல்லது இரண்டு ரக்அத் விடுபட்டிருந்தால், எழுந்து அவற்றை நிறைவேற்றுவார், சலாம் கொடுப்பார், பிறகு மறதிக்காக இரு சஜ்தா செய்வார், பிறகு சலாம் கொடுப்பார். இந்த இரு சஜ்தாக்கள், இமாம் நான்காவது ரக்அத்துக்காக எழுந்தபோது ஓர் அமர்தலை இவர் அதிகப்படுத்தினாரே அதற்காகச் செய்வதாகும்.

## கருத்துச் சுருக்கம்

மேலே சொன்ன விளக்கத்தில் இருந்து நமக்குத் தெளிவாகத் தெரியவருவது என்னவெனில், மறதிக்கான இரண்டு சஜ்தாக்கள், ஒருதடவை சலாம் கொடுப்பதற்கு முன்பு செய்யப்படுகிறது என்றும் இன்னொரு தடவை சலாம் கொடுத்ததற்குப் பின்பு செய்யப்படுகிறது என்றும் தெரியவருகிறது.

சலாம் கொடுப்பதற்கு முன்பு சஜ்தா செய்ய வேண்டிய இரண்டு வடிவங்கள் வருமாறு:

1) குறைப்பதனால் மறதி சஜ்தா செய்யும் நிலை: ஏனெனில் அப்துல்லாஹ் பின் புஹைனா (ரலி) அவர்கள் மூலம் அறிவிக்கப்பட்டுள்ளது: நபி (ஸல்) அவர்கள் முதல் அத்தஹிய்யாத்தை (மறதியாக)விட்டு

---

**இருங்கள் எனும் வாசகம் அதிகமாகப் பதிவாகியுள்ளது. தொழுகை பகுதியில், இமாம் உட்கார்ந்து தொழுவார் எனும் பாடத்தில் அறிவித்துள்ளார்கள். (எண் 604) இமாம் நஸாஈ, தொழுகையின் ஆரம்பத்தில் அறிவித்துள்ளார்கள். (எண் 920) இப்னு மாஜா எண் 846) இமாம் அஹ்மது எண் 2 - 420)**

விட்டபொழுது சலாம் கொடுப்பதற்கு முன் மறதி சஜ்தா செய்தார்கள். இந்த நபிமொழி முன்னர் சென் றுள்ளது.

2) சந்தேகத்திற்காக அதாவது இரண்டு விஷயங்களில் எதுவும் மிகையான எண்ணத்தைப் பெறவில்லை என்பதற்காக சஜ்தா செய்யும் நிலை. ஏனெனில் அபூ ஸயீதுல் குத்ரி (ரலி) அவர்களின் அறிவிப்பில் உள்ளது: ஒரு மனிதருக்குத் தொழுகையில் சந்தேகம் வந்தால், தொழுதது மூன்று ரக்அத்தா, நான்கு ரக்அத்தா என்று அறியவில்லை என்றால், அவர் சலாம் கொடுப்பதற்கு முன்பு இரண்டு சஜ்தா செய்ய வேண்டும் என நபி (ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள். இந்த நபிமொழியும் முன்பு சென்றுள்ளது.

சலாம் கொடுத்தற்குப் பிறகு சஜ்தா செய்ய வேண்டிய இரண்டு வடிவங்கள் வருமாறு:

1) அதிகப்படுத்துவதனால் மறதி சஜ்தா செய்யும் நிலை: ஏனெனில் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) அவர்கள் அறிவித்த நபிமொழியில் வந்துள்ளது: நபி (ஸல்) அவர்கள் ளுஹர் தொழுகையை 5 ரக்அத் தாக தொழுதார்கள். சலாம் கொடுத்த பிறகு அது பற்றி நபி(ஸல்)அவர்களுக்கு மக்கள் நினைவூட்டி யபோது நபியவர்கள் மறதி சஜ்தா இருமுறை செய்தார்கள். பிறகு சலாம் கொடுத்தார்கள். சலாம் கொடுத்த பிறகு நபியவர்கள் சஜ்தா செய்ததன் காரணம், அதிகப்படுத்தியது பற்றி **அதன் பிறகுதான்** அறிந்து கொண்டார்கள் என்பதுதான் என்று நபியவர்கள் விளக்கவில்லை. இது எதைக் காட்டுகிறது? சட்டம் பொதுவானது என்பதையே காட்டுகிறது - அதாவது, அதிகப்படுத்திய காரணத்தால் சஜ்தா செய்வதாயின் சலாம் கொடுத்த பிறகுதான் செய்ய வேண்டும் என்பதையே இது காட்டுகிறது. அதிகப் படுத்தியது பற்றி - சலாம் கொடுப்பதற்கு முன்பு அறிந்தாலும் சரி, சலாம் கொடுத்த பிறகு அறிந்தாலும் சரியே!

இதேபோன்றதுதான் பின்வரும் நிலையும்: ஒரு மனிதர் தொழுகையை முழுமைப்படுத்துவதற்கு முன்ன தாக சலாம் கொடுத்தார். பிறகு நினைவு வரவே தொழுகையை முழுமையாக்கினார் - இந்த மனிதர் தொழுகைக்கு இடையில் - **சலாம் கொடுத்தல்** எனும் செயலை அதிகப்படுத்தி விட்டார். எனவே சலாம் கொடுத்த பிறகு மறதிக்கான இரு சஜ்தாகள் செய்வார். ஏனெனில், அபூ ஹுரைரா (ரலி) அவர்களின் அறிவிப்பு வந்துள்ளது: நபி (ஸல்) அவர்கள் ளுஹர் அல்லது அஸ்ர் தொழுகையில் இரண்டாவது ரக்அத் தில் சலாம் கொடுத்தார்கள். அது பற்றி நபியவர்களுக்கு மக்கள் நினைவூட்டியபொழுது நபியவர்கள் எழுந்து தொழுகையை முழுமைப்படுத்தினார்கள். சலாம் கொடுத்தார்கள். பிறகு மறதிக்கான இரண்டு சஜ்தா செய்தார்கள். இந்த நபிமொழி முன்னர் சென்றுள்ளது.

2) சந்தேகத்திற்காக அதாவது இரண்டு விஷயங்களில் எதுவும் மிகையான எண்ணத்தைப் பெற வில்லை என்று ஐயம் ஏற்பட்டதற்காக சஜ்தா செய்யும் நிலை. ஏனெனில் இப்னு மஸ்வூத் (ரலி) அவர் களின் அறிவிப்பில் வந்துள்ளது: தொழுகையில் சந்தேகப்பட்ட மனிதருக்கு நபி (ஸல்)அவர்கள் கட்டளை யிட்டார்கள், எது சரி என்பதை அவர்கள் தெண்டித்துத் தெரிந்துகொண்டு அதன்படி தொழுகையை முழுமைப்படுத்த வேண்டும்! பிறகு அவர் சலாம் கொடுக்க வேண்டும்., சஜ்தா செய்ய வேண்டும் என்று கட்டளையிட்டதாக வந்துள்ளது. இந்த நபிமொழி யும் முன்பு சென்றுள்ளது.

ஒரு மனிதருக்கு தொழுகையில் இரண்டு முறை சந்தேகம் ஏற்பட்டால், ஒரு சந்தேகத்திற்கு - சலாம் கொடுப் பதற்கு முன்பு சஜ்தா செய்ய வேண்டும்., இன்னொரு சந்தேகத்திற்கு - சலாம் கொடுத்த பிறகு சஜ்தா செய்ய வேண்டும் என்று இருந்தால், இந்த இடத்தில் மார்க்க அறிஞர்கள் கூறியுள்ளார்கள்: சலாம் கொடுப்பதற்கு முன்பு சஜ்தா செய்வதே மிகைப்படுத்தப்படும். எனவே சலாம் கொடுப்பதற்கு முன்புதான் சஜ்தா செய்ய வேண்டும்.

இதற்கு எடுத்துக்காட்டு: ஒரு மனிதர் ளுஹர் தொழுகிறார். இரண்டாது அத்தஹிய்யாத்துக்காக உட்காராமல் எழுந்து விட்டார். மூன்றாவது ரக்அத்தில் உட்கார்ந்தார். அதுதான் இரண்டாவது ரக்அத் என்று எண்ணுகிறார். பிறகுதான் அது மூன்றாவது ரக்அத் என்பது நினைவுக்கு வந்தது. இவர் எழுந்து ஒரு ரக்அத் தொழுவார். மறந்ததற்காக சஜ்தா செய்வார். பிறகு சலாம் கொடுப்பார்.

இந்த மனிதர் முதல் அத்தஹிய்யாத்தை விட்டு விட்டார். அதற்காக சஜ்தா செய்வது,சலாம் கொடுப் பதற்கு முன்பு ஆகும். மேலும் மூன்றாவது ரக்அத்தில் **அமர்தல் எனும் செயலை** அதிகப்படுத்தியுள்ளார். அதற்காக சஜ்தா செய்வது, சலாம் கொடுத்த பிறகு ஆகும். ஆனால் சலாம் கொடுப்பதற்கு முன்பு சஜ்தா செய்தல் என்பது இங்கு மிகைப்படுத்தப்பட்டு (ஸலாம் கொடுப்பதற்கு முன்பு ஸஜ்தா செய்ய வேண்டும் என்று சொல்லப்பட்டு) ள்ளது. அல்லாஹ்தான் மிகவும் அறிந்தவன்.

அல்லாஹ்விடம் நான் இறைஞ்சுகிறேன், அவனது வேதத்தையும் அவனுடைய தூதரின் வழிமுறைகளையும் தெளிவாகப் புரிந்து கொள்வதற்கு அருள்பாலிப்பானாக! கொள்கைக்கோட்பாட்டில், வணக்க வழிபாட்டில், வாழ்க்கை விவகாரங்களில் குர்ஆன் - ஹதீஸின்படியே செயல்படுவதற்கு - நமக்கும் ஏனைய முஸ்லிம் சகோதரர்களுக்கும் நல்லருள்பாலிப்பானாக! எங்கள் அனைவருக்கும் - இறுதி முடிவை அழகாக்கித் தருவாயாக என்று அவனிடமே நான் இறைஞ்சுகிறேன். திண்ணமாக அல்லாஹ் மாபெரும் கொடையாளன்., சங்கைக்குரியவன்!

அகிலம் முழுவதையும் படைத்துப் பரிபாலிக்கும் இறைவனாகிய அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும். நம்முடைய நபி முஹம்மது (ஸல்) அவர்கள் மீதும் அவர்களின் குடும்பத்தினர், தோழர்கள் அனைவர் மீதும் அல்லாஹ் தனது கருணையையும் கிருபையையும் பொழிவானாக!